




# நான்கு நண்பர்கள்

## (பஞ்சதந்திரக் கதைகள்)

சொன்னவர் : அழ. வள்ளியப்பா

ஓவியர் : ரஸாக்

RAZACK...



# FOUR FRIENDS

(STORIES FROM PANCHATANTRA)

*Retold by:* **AL. VALLIAPPA**

*Illustrated by:* **RAZACK**

**Children's Day Publication**

*14th November 1962*

*First Edition: 5000 Copies*

Published under the auspices of
The Southern Languages Book Trust
Second Series — Tamil Ch. Bk.

*Publisher:*

**S. R. SUBRAMANIA PILLAI**

PUBLISHER :: TIRUNELVELI



# நான்கு நண்பர்கள்

ஒரு காடு. அந்தக் காட்டில் ஒரு காக்கை இருந்தது. ஓர் எலி இருந்தது. ஒரு மான் இருந்தது. ஓர் ஆமை இருந்தது. இந்த நான்கும் நண்பர்கள்.

ஒருநாள் மேயப்போன மான் திரும்பி வரவில்லை. வெகுநேரம் வரை வரவில்லை. காக்கையும், எலியும், ஆமையும், 'மான் எப்போது வரும்? எப்போது வரும்?' என்று எதிர்பார்த்துக்கொண்டே இருந்தன. மான் வரவே இல்லை!

மானைத் தேடி காக்கை புறப்பட்டது. இங்கும் அங்கும் பறந்தது. கடைசியாக மானைக் கண்டு பிடித்துவிட்டது. ஆனால், பாவம், மான் ஒரு வலைக்குள் அகப்பட்டுக் கொண்டிருந்தது !

மான் பக்கத்திலே காக்கை போனது. “நண்பா, கவலைப்படாதே. நான் உடனே போய், நமது எலியைக் கூட்டிக்கொண்டு வருகிறேன். அது இந்த வலையை [illegible]க்து உன்னைக் காப்பாற்றிவிடும்” என்றது.

உடனே, எலியும் ஆ[illegible]ம் இருந்த இடத்திற்குக் காக்கை பறந்து சென்றது. தான் பார்[illegible] ததைச் சொன்னது. [illegible] கேட்டதும், “ஆ அப்படிய[illegible] வா, உடனே போகலாம்” என்றது எலி.



காக்கை, எலியை முதுகிலே தூக்கிக்கொண்டு பறந்தது. இரண்டும் மான் இருந்த இடத்திற்குச் சென்றன. ஆமையும் பின்னலே சென்றது. 'மான் என்ன ஆனதோ!' என்ற ... மைக்கு. நகர்ந்து, நகர்ந்து மான் ...டத்திற்கு வந்து சேர்ந்தது.

காக்கை மேலே பறந்துபோய் வேடன் வருகி... று பார்த்தது. வேடன் கொஞ்ச தூரத்தில் வந்து கொண்டிருந்தான். உடனே, "அதோ வேடன் வருகிருன். சீக்கிரம் வேலை நடக்கட்டும்" என்றது காக்கை.

எலி வலையைப் பல்லால் கடித்தது. வலை அறுந்தது. மான் தப்பித்துக்கொண்டது.

வேடன் வருவதற்குள் மான் ஒரே ஓட்டமாக விட்டது. வேடன் ஏமாந்துபோனன்!





மான் தப்பி ஓடியதும், எலி பக்கத்தில் இருந்த பொந்துக்குள் ஓடி ஒளிந்துகொண்டது. காக்கை பறந்து போய் மரத்தில் உட்கார்ந்துகொண்டது. ஆமையால் ஓட முடியுமா? அது மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது.

வேடன் ஆமையைப் பார்த்துவிட்டான். உடனே அதைப் பிடித்தான். 'மான் கிடைக்கவில்லை. இந்த ஆமையாவது கிடைத்ததே. இதைச் சமைத்துச் சாப்பிடலாம்' என்று நினைத்தான். ஆமையை வில்லுடன் சேர்த்து நன்றாகக் கட்டினான்; தூக்கிக் கொண்டு நடந்தான்!

"ஐயோ, ஆமை வேடனிடம் அகப்பட்டுக் கொண்டதே!" என்று காக்கையும் எலியும், மானும் கவலைப்பட்டன. அப்போது, ஆமையைக் காப்பாற்றக் காக்கை ஒரு யோசனை சொன்னது. அது மிகவும் அருமையான யோசனை.

வேடன் போகும் வழியில் ஓர் ஏரி இருந்தது. அந்த ஏரிக் கரைக்கு காக்கை, மான் எலி மூன்றும் சென்றன. வேடன் போவதற்கு முன்பே போய்விட்டன.

ஏரிக்கரையில் மான் செத்ததுபோல் படுத்துக் கொண்டது. மான் தலைமேல் காக்கை உட்கார்ந்து கொண்டு, முகத்தைக் கொத்துவதுபோல் பாசாங்கு செய்தது. எலி சிறிது தூரத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது.

வேடன் மானைப் பார்த்தான். 'அடே, இங்கே ஒரு மான் செத்துக் கிடக்கிறதே!' என்று நினைத்தான். உடனே கையில் இருந்த



ஆமையை ஏரிக்கரையில் வைத்துவிட்டு, மானை நோக்கிப் போனான்.

வேடன் நெருங்கி வருவதைக் காக்கை பார்த்தது. பார்த்ததும், 'காகா, காகா' என்று கத்திக்கொண்டே மேலே பறந்தது. உடனே, மான் சட்டென்று எழுந்தது; ஓரே ஓட்டமாக ஓடிவிட்டது.

இதற்குள் ஏரிக் கரையில் இருந்த ஆமையிடம் எலி ஓடிவந்தது. ஆமையைக் கட்டியிருந்த கயிற்றை அவசர அவசரமாகப் பல்லால் கடித்து, அறுத்தது.

ஆமை தப்பித்துக்கொண்டது. பக்கத்திலிருந்த ஏரித் தண்ணீருக்குள் இறங்கி ஒளிந்துகொண்டது. எலியும் புதருக்குள் ஓடி ஒளிந்துகொண்டது.

ஏமாந்துபோன வேடன் ஆமையை வைத்த இடத்திற்கு வந்தான். அங்கே ஆமையைக் காணோம். அறுந்த கயிறும், வில்லும்தான் கிடந்தன. 'ஐயோ, மானுக்கு ஆசைப்பட்டேன். கையில் இருந்த ஆமையும் போய்விட்டதே!' என்று வருந்தினான்.

மறுபடியும் நான்கு நண்பர்களும் ஒன்றாய்க் கூடினார்கள்.

"புத்தி இருந்தால் பிழைத்துக் கொள்ளலாம்" என்றது காக்கை.

"ஒற்றுமையே பலம்" என்றது எலி.

"ஆமாம், ஆமாம்" என்று தலையை ஆட்டின ஆமையும், மானும்.





# முத்து மாலே

ஆலமரத்தில் ஒரு காக்கை கூடு கட்டியிருந்தது. அந்த மரத்தின் கீழே ஒரு புற்று இருந்தது. அந்தப் புற்றில் ஒரு பாம்பு வசித்துவந்தது. அந்தப் பாம்பு பொல்லாத பாம்பு! அது அடிக்கடி மரத்தின் மேல் ஏறி, காக்கையின் முட்டைகளே உடைத்துச் சாப்பிட்டுவிடும்.

இதனுல், காக்கை வருத்தப்பட்டது. நரியிடம் யோசனே கேட்டது.



நரி ஒரு யோசனை சொன்னது அதைக் கேட்டதும், "சரியான யோசனை. நான் அப்படியே செய்கிறேன்" என்றது காக்கை.

உடனே காக்கை நேராக அரண்மனைக்குச் சென்றது. அரசகுமாரி குளிக்கும் இடத்தில் காத்துக்கொண்டிருந்தது.

அரசகுமாரி அங்கே வந்தாள். நகைகளைக் கழற்றி ஒரு பக்கமாக வைத்துவிட்டுக் குளித்துக் கொண்டிருந்தாள். அப்போது அவளுடைய முத்து மாலையைக் காக்கை தூக்கிக்கொண்டு பறந்தது. உடனே அரசகுமாரி கூச்சல் போட்டாள். அரண்மனைச் சேவகர்கள் காக்கையைத் துரத்திக்கொண்டு ஓடினார்கள்.

காக்கை முத்து மாலையைப் பாம்புப் புற்றில் போட்டுவிட்டு மரத்தின் மேல் உட்கார்ந்து கொண்டது. சேவகர்கள் புற்றின் பக்கத்திலே போனார்கள். உள்ளே முத்து மாலை கிடந்ததால் புற்றை இடித்தார்கள். அப்போது உள்ளேயிருந்த பாம்பு புஸ் என்று சீறிக்கொண்டு வெளியே வந்தது.



சேவகர்கள் பாம்பை ஈட்டியால் குத்தினார்கள். பாம்பு அங்கேயே செத்துப் போய்விட்டது.

சேவகர்கள் முத்து மாலையை எடுத்துக்கொண்டு திரும்பினார்கள்.

காக்கை

சுகமாக

வாழ்ந்தது.





# சுண்டெலிக் கல்யாணம்

ஒரு முனிவர் கங்கை நதிக்குப் போனார். நன்றாகக் குளித்துவிட்டுக் கரைக்கு வந்தார்.



அப்போது 'தொப்' பென்று ஒரு சுண்டெலி மேலே இருந்து விழுந்தது. அது ஒரு பெண் சுண்டெலி. உடனே, முனிவர் நிமிர்ந்து மேலே பார்த்தார். ஒரு பருந்து ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. அது தான் சுண்டெலியைத் தவறிக் கீழே போட்டுவிட்டது என்பதைத் தெரிந்து கொண்டார்.





சுண்டெலி துடிதுடித்துக் கொண்டிருந்தது. முனிவருக்கு இரக்கம் உண்டாகி விட்டது. அவர் ஏதோ ஒரு மந்திரத்தைச் சொன்னார். உடனே அந்தச் சுண்டெலி ஒரு சிறு பெண்ணாக மாறி விட்டது. முனிவர் அந்தப் பெண்ணைக் கூட்டிக்கொண்டு ஆசிரமத்திற்குப் போனார்; அன்பாக வளர்த்து வந்தார்.

சில காலம் சென்றது. அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்யவேண்டிய வயது வந்தது. அவளை யாருக்குக் கல்யாணம் செய்து கொடுக்கலாம் என்று முனிவர் யோசித்தார். ‘சூரியனுக்குத்தான் கொடுக்கவேண்டும். அவன்தான் நல்ல பலசாலி’ என்று தீர்மானித்தார்.

உடனே சூரியனை வரவழைத்தார். சூரியன் வந்ததும், "ஏனம்மா, உனக்கு இந்த மாப்பிள்ளை பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார்.





"இவரா? ஐயையோ! வேண்டவே வேண்டாம். இவர் ஒரே சூடாக இருக்கிறார். என்னால் இந்தச் சூட்டைத் தாங்கவே முடியாது. இவரைக் காட்டிலும் பலசாலியைத் தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்" என்றாள்.

"அப்படியானால், மேகத்தைக் கல்யாணம் பண்ணிக் கொள். மேகம்தான் என்னைவிட பலசாலி. அது அடிக்கடி என்னையே மறைத்துவிடுகிறது." என்றது சூரியன்.

உடனே முனிவர் மேகத்தை வரவழைத்தார்.

மேகத்தைப் பார்த்ததும், "ஐயோ, இவர் ஒரே கறுப்பு. அடுப்புக் கரி மாதிரி இருக்கிறார். எனக்கு வேண்டாம். இவரைவிட பலசாலிதான் வேணும்" என்றாள்.

"காற்றுத்தான் என்னைவிட பலசாலி. அது என்னைத் துரத்திக்கொண்டே இருக்கும்" என்றது மேகம்.

முனிவர் காற்றை வரவழைத்தார்.

காற்றைப் பார்த்ததும், “இவரோடு எப்படி நான் வாழ முடியும்? இவர் ஓர் இடத்திலே தங்கமாட்டார். எப்போதும் ஓடிக்கொண்டே இருப்பார். இவர் வேண்டாம். இவரைக் காட்டிலும் பலசாலியைத்தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்” என்ருள்.

“என்னைக் காட்டிலும் பலசாலி மலை தான். என்ருல், மலையை அசைக்கக் கூட முடியவில்லையே!” என்றது காற்று.

பிறகு முனிவர் மலையை வரவழைத்தார்.

மலையைப் பார்த்ததும், “இவர் ஒரே கரடு முரடாக இருக்கிருர். இருந்த இடத்தைவிட்டு இப்படி அப்படி





அசையமாட்டார். எனக்கு இவர் வேண்டாம். இவரைக் காட்டிலும் வேறு பலசாலி கிடையாதா ?" என்று கேட்டாள்.

"ஏன் இல்லே ? சுண்டெலி இருக்கிறதே! அது என்னைவிடப் பெரிய பலசாலி. என் வயிற்றையே அது குடைந்துவிடுகிறதே!" என்றது மலே.

உடனே முனிவர் சுண்டெலியை வரவழைத்தார். சுண்டெலியைப் பார்த்ததும், "ஆ! இவர்தான் எனக்குப் பிடித்தமான மாப்பிள்ளை. ஆகா, என்ன அழகு! என்ன கம்பீரம்! என்ன சுறுசுறுப்பு!" என்ருள்.

இதைக் கேட்டதும் முனிவர் மகிழ்ச்சி அடைந்தார். உடனே ஒரு மந்திரத்தைச் சொன்ருர். சொல்லி முடித்ததும், அந்தப் பெண் பழையபடி சுண்டெலியாக மாறிவிட்டாள்.

சுண்டெலிப் பெண்ணுக்கும் சுண்டெலி மாப்பிள்ளைக்கும் முனிவர் கல்யாணம் பண்ணிவைத்தார். கல்யாணம் வெகு வெகு சிறப்பாக நடந்தது.







வெகு காலத்துக்கு முன்பு பாடலிபுரத்து அரச குமாரர்களுக்கு, விஷ்ணு சர்மர் என்பவர் சொன்ன கதைகளே பஞ்சதந்திரம். அந்த மணி மணியான கதைகளில் மூன்று கதைகள் இப் புத்தகத்திலே இருக்கின்றன.


பதிப்பாளர்:

**எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை**

பப்ளிஷர் திருநெல்வேலி.